# சித்த மருத்துவம்

திங்கள் இதழ்

மலர் : 13 ✻ பவ ஆண்டு நவம்பர் 1, 1994 ✻ இதழ்: 7



சிறப்புக்கட்டுரை:

## மனிதனிடம் ஏற்படும் சிக்கல்



### இந்த இதழில்



தனிப் பிரதி ரூ. 2-50 ஆண்டுச் சந்தா ரூ. 28-00

நிறுவனர் டாக்டர் சிற்சபை

மனிதனுடைய அழகுக்கும் தீரத்திற்கும், வீரகம்பீரத்திற்கும், புத்தி விசாலத்துக்கும் மூலமாக இருப்பது விந்துவே! இது இருக்குமிடத்தில் இன்பம்! இல்லாவிடத்துத் துன்பம்!

—அமரர். டாக்டர். சிற்சபை




# சித்த மருத்துவம்

ஆசிரியர் டாக்டர். சி. அம்பிகாபதி

உதவி ஆசிரியர் டாக்டர். சி. தங்கதுரை

மலர்: 13 | 1994 நவம்பர், | இதழ்: 7


# மனிதனிடம் ஏற்படும் சிக்கல்!

சர்வே ரோகாமாலாக வசாகா என்று வடநாட்டு மருத்துவ நூல்களில் ஒரு சூத்திரம் உள்ளது. அதாவது மலம் தான் சர்வ நோய்களையும் உண்டாக்குகிறது என்று அதன் பொருளாக கொள்ளவேண்டும் மனித உடலிலுள்ள ஜீரணப் பாதை, குடல்கள், இறப்பை, ஆசனவாய் ஆகிய இவைகளில் ஏற்படும் இடர்பாடுகள் காரணமாக, மலச்சிக்கல் ஏற்படுகிறது

நாம் உண்ணும் உணவில் பாதிபகுதி உடலுக்கு உணவாகிறது. மீதமுள்ள பாதி பகுதி மலமாக வெளியேறுகின்றது. இன்றைய நாகரீக உணவுப் பழக்க வழக்கங்களின் காரணமாகவே மலச்சிக்கல் ஏற்படுகிறது, நமது உணவில் நார்ப் பொருட்களும், தவிட்டுப் பொருட்களும் இல்லாவிட்டால் மலம் ஒட்டும். ஆதலால் அதிக அளவு காய்கறிகளும். கீரைகளும், பழங்களும் உட்கொள்ள வேண்டும்,

அதிக உணவும், ஏற்றுக் கொள்ளாத உணவும், அதிக கடின உழைப்பு உடற்பயிற்சி இல்லாமை, உடல் உறவில்

அதிக ஈடுபாடு ஆகிய இவைகளால் மலச்சிக்கல் ஏற்படும். நம் நாட்டு மக்கள் அதிக அளவு நாக்கிற்கு அடிமையானதால், ருசிக்காக உணவை மாற்றியதால் மலச்சிக்கலுக்கு அடிமையாகின்றோம். சர்க்கரை வியாதிக்காரர்களுக்கு மலச்சிக்கல் ஏற்படும்.

புகையிலை, தேயிலை, மது இவைகளினால், மனித உடலிலுள்ள நரம்புகள் அடிக்கடி தூண்டப்பட்டு, விரைவில் அந்த நரம்புகள் தளர்ச்சியடைந்து மலச்சிக்கலை உண்டாக்குகிறது. திடீர் பருவநிலை மாற்றத்தாலும், நீண்ட நேரம் பிரயாணத்தினாலும் மலச்சிக்கல் ஏற்படும். நன்கு மென்று உமிழ்நீர் கலந்து, உண்ணாவிட்டாலும், மலச்சிக்கல் ஏற்படும் பெருங்குடலின் வெளியே தள்ளும் உறுப்புக்கள் சரிவர இயங்காவிட்டாலும் மலச்சிக்கல் தோன்றும் குறித்த நேரத்தில் மலம் கழிக்கத் தவறியதாலும் மலச்சிக்கல் ஏற்படும்.

மலச்சிக்கலினால் துர்நாற்றமுள்ள காற்றுக்களை உற்பத்தி செய்கிறது. இதன் மூலமாக தலைவலி கண்ணில் நீர்வடிதல், கண் பார்வை மங்குதல் நாக்கில் புண், வாய்ப்புண், காதுவலி மூக்கடைப்பு, பீனிச வியாதி முதலியன உண்டாகின்றன.

இதன் மூலமாக பசிமந்தம், வாயில் எந்த உணவும் ருசிக்காக. உடலில் சோர்வும், தூக்கமும் உண்டாகும். மலச்சிக்கல்தான் இடுப்பு வலிக்கு முக்கிய காரணமாகும். திருமூலர் தன் பாடலில் "மாதா உதரம் மலம்மிகில் மந்தனும்" என்று பாடியுள்ளார். பிறக்கும் குழந்தை மந்த புத்தியுள்ளவனாக இருக்கும் என்று கூறுகின்றார்.

❊❊❊❊❊❊❊❊❊❊❊❊

## குழந்தைகளுக்கு

காரட்டை டத் தோல் நீக்கிச் சிறு துண்டுகளாக வெட்டிப் பசும் பாலில் போட்டு அவித்து எடுத்துச் சிறிது தேன் கலந்து குழந்தைக்குக் கொடுத்து வந்தால் குழந்தை இளைப்பு நீங்கி உடல் வலுப்படும். உடல் எடை கூடும். குழந்தைகளுக்கு நோய் வராமல் காக்கும்.

❊❊❊❊❊❊❊❊❊❊❊❊

## மலச்சிக்கலை தீர்க்கும் வழிகள்

பச்சை வாழைப்பழம், மலைப் பழம், மொந்தன் வாழைப்பழம் உலர்ந்த அத்திப்பழம், கொய் யாப்பழம் பப்பாளிப் பழம், கஜ்ஜருகாய் முதலியன முதலியன மலச்சிக்கலைப் போக்கும் தன்மையுடையது.

சில பழங்களுக்கு ஒரே சமயத்தில் இருவிதபலன்களைத் தரும். குறிப்பாக வில்வப்பழ மானது மலச்சிக்கலாக இருந் தால் மலத்தை வெளித்தள்ளும், பேதியாகின்ற சமயத்தில் மலத்தைக் கட்டும் தன்மை யுடையது. மூலாம்பழம், திராட்சைப்பழம் முதலியன மலச்சிக்கலைத் தீர்க்கும் பேரிக் காயும் மிக்க பயனைத்தரும்.

இரவில் படுக்கைக்கு போகும் போது அரை தேக்கரண்டி கடுக்காய்தூளை, அரைகப் தண் ணீரில் கலந்து உட்கொள்ள மலச்சிக்கல் தீரும், காலையில் எழுந்தவுடன் ஏழரை டம்ளர் தண்ணீர் (ஒன்றரை லிட்டர்) குடித்தால், அரைமணி நேரத் தில் மலச்சிக்கல் தீரும்,

இதைத்தவிர உடனடியாக சுத்தமான குடிக்கும் தண்ணீ ரால் மலக்குடலை கழுவி, மலத்தை அகற்ற வேண்டும். அதற்கு 'எனிமா' முறைதான் சிறந்தது. இதன் மூலமாக உடல் கனம் குறைந்த உணர்வு ஏற்படுகிறது வயிற்றிலும் மூலத்திலும் உள்ள வெப்பம் தணிகின்றது. உடலில் மேலும் மாறுதல்கள ஏற்படுவதால், பல நோய்கள் குணமாவதற்கு வாய்ப்பு உண்டாகின்றது ஆதலால் பல நோய்களுக்கு காரணமான மலச்சிக்கலை தின மும் ஏற்படாமல் பாதுகாத்தால் மனித உடலில் ஏற்படும் பல சிக்கல்களிலிருந்து காப்பாற்ற லாம்!

கௌரவ ஆசிரியர்

❊❊❊❊❊❊❊❊❊❊❊❊

## தோல் மென்மை அடைய

———

சுரசுரப்பான தோல் உடை யவர்கள், பாசிப் பருப்பை (பயத்தம்பருப்பு) ஊறவைத்து அரைத்த விழுதில் அரை எலுமிச்சம்பழச்சாறு விட்டுக் கலந்து, உடலில் பூசி கால் மணி நேரம் கழித்துக் குளித்து வந்தால் தோல் மென்மை அடையும்.

❊❊❊❊❊❊❊❊❊❊❊❊

# நோய்க்கான காரணங்கள்

நோய் என்பது தவிர்க்க முடியாத கெடுதல் எனப் பலர் தவருகக் கருதுகின்றனர். மருத்துவர்களும், விஞ்ஞானிகளும் இன்ன இன்ன வியாதிகள் இன்ன இன்ன காரணங்களால் உண்டாகின்றன என்று தெளிவாகக் காட்டியுள்ளனர்.

வேண்டிய ஊட்டச் சத்து இல்லாமையால் சிலநோய்கள் உண்டாகின்றன. உதாரணமாக, தீக்குச்சி செய்யும் இடங்களில் பணிபுரிவோர் உடம்பில் பாஸ்பரம் நஞ்சு கலந்து, அதனுல் நோய் ஏற்படுவது உண்டு.

தீய பழக்கங்களாலும் நோய்கள் உண்டாகின்றன. மது, புகைபிடித்தல் போன்ற பழக்கங்களால் வரும் வியாதிகள் பல. பாக்டீரியா, வைரஸ், அமீபா, கொசுக்கள் போன்ற பூச்சிகள் போன்ற பலவற்ருலும் வியாதிகள் உண்டா-கின்றன.

## கிருமிகள் பரம விரோதிகள்

நோய்க்கிருமிகள் தினந்தோறும் இலட்சக்கணக்கான மக்களை நோயுறச் செய்கின்றன. ஜலதோஷம், க்ஷயம், நிமோனியா, வயிற்றுப்போக்கு, டைபாயிடு, காலரா, வாய்ப்பூட்டு நோய், அம்மை, கக்குவான் இருமல், மலேரியா, பிளேக் முதலியன பல வியாதிகள் நோய்க் கிருமிகளால் உண்டாகின்றன.

நோய்க்கிருமிகள் இருவகைபடும் ஒருவகை பயிர் இனத்தைச் சேர்ந்தவை. மற்ருெருவகை பிராணி இனத்தைச் சேர்ந்தவை. கண்ணுக்குத்தெரியாத இவ்வகை கிருமிகள் சொல்லவொண்ணு தீங்கை மனித குலத்துக்கு இழைக்கின்றன.

ஆறு, குளம், கிணறு இவற்றின் நீரிலும் தெருப்புழுதியிலும், வீட்டுச்சுவர், தரை இங்குள்ள தூசியிலும் கிருமிகள் காணப்படுகின்றன. உண்ணும் உணவிலும் அருந்தும் பானத்திலும் கூட இருக்கின்றன. இவை அணுகாமல் காத்துக்கொண்டால் நோயினின்று நம்மைப் பாதுகாத்துக் கொள்ள முடியும்.

# விளாமரம்!
# (Wood-Apple Tree)

(Dr. பெ. மு. இரா)

இந்தியா முற்றும் பயிராகும் விளாமரம். இதன் பழத்திற்கெனவே வீடுகளினருகிலும், தோட்டங்களிலும் வளர்க்கப்படுகின்றன. கபித்தம், கடிப்பகை, விளாவு, வெள்ளில் எனவும் அழைக்கப்பெறும் விளாமரத்தின் இலை, காய், பழம், பழத்தின் ஓடு, பட்டை, பிசின் ஆகிய உறுப்புகள் பயனுள்ளவையாகும். இதன் இலை துவர்ப்பு விறுவிறுப்புச் சுவையுடனும், வெப்பமான தன்மையுடனும் கூடிய கார்ப்பு வகைப் பிரிவைச் சார்ந்தும் காய் துர்வப்பு, பழம், இனிப்புச் சுவைகளுடனும் தட்பமான தன்மையுடனும் கூடிய இனிப்பு வகைப்பிரிவைச் சார்ந்தும் இருக்கும். முத்தோடங்களையும் தன்னிலைப் படுத்தி உடலாண்மையைத் தருவதலால் இது ஒரு கற்ப வகையாகும் இம் மரத்தின் வேர், இலை காய் கனி முதலிய வற்றை முறையே கற்ப முறைப்படி உண்டுவர, பிணியின்றி நீண்ட நாள் வாழலாம். விளாமரப் பட்டையினால் இருமல், இரைப்பு, சுவையின்மை, நீர் வேட்கை, வெறிநோய் முதலியன தீரும். பட்டையை சூரணித்து தக்க அளவில் உண்ண பித்தம் குன்றும், பட்டையைக் குடிநீரிட்டும் அருந்துவதுண்டு விளாம்பூ வேர் இலை, பட்டை பழம் இவற்றை முறைப்படி சூரணித்து விராகனளவில் சர்க்கரையுடன் உண்டுவர பித்தம், பசியின்மை, பேதி, சீதபேதி வாநீருதல் முதலியன தீரும்.

**விளா இலை:-**

அகட்டிலுள்ள வாயுவை நீக்கவும் பசியை உண்டாக்கவும் வல்ல விளா இலை துவர்ப்பி மற்றும் மணமூட்டியாகவும் பயன்படும். விளா இலைக் கொழுந்து சாற்றை பால் (அல்

லது) தயிருடன் கூட்டி சற்கண்டு தூளும் கலந்து அருந்த அழல் நோய்கள் தீரும். இதற்கு துளிரின் விழுதையும் பால் (அல்லது) தயிரில் கலக்கி உட்கொள்வதுண்டு கொழுந்தை குடிநீரிட்டு அருந்த வயிற்றின் வாயுத் தொல்லைகள் நீங்கிப்பசி உண்டாகும். கொழுந்துச் சாற்றை மேலே தடவ கொப்புளங்கள் கோடையின் வியர்க்குரு முதலியன நீங்கும்.

### விளாம்பழம்—காய் -

துவர்ப்பியாக் பயன்படும் விளாங்காயினல் கழிச்சல் வகைகளும், மணமூட்டி மற்றும் குளிர்ச்சியூட்டியாகப் பயன்படும். விளாம்பழத்தினல் ஈளை இருமல், கோழை, வெப்பத்தாலான நீர் வேட்கை முதலியனவும் நீங்கி பசியுண்டாகி உடற்கு நன்மையையும் கிட்டும். பொதுவாக காய் மற்றும் பழத்தினல் அழல் நோய் யாவும் தீரும்.—விளாங்காயை பச்சடி செய்து உண்பதால் வாய்ப்புண் உள்ளழல் மாறும் காயை ஒடு நீக்கித் தனித்தோ விளாம் பழத்துடன் சேர்த்தோ கொடுக்க கழிச்சல் நிற்கும். செங்காயின் சதையுடன் திட்டமாக உப்பு, மிளகாய், இஞ்சி, கூட்டி துவையலாக்கி, அன்னத்துடன் கலந்துண்ண பித்தம் தணியும். பழச்சதையுடன் சர்க்கரை கூட்டிப் பிசைந்து உண்ண பித்தம் தணிவதோடு வாய்ப்புண், தொண்டைப்புண் வாநீருதல், பல்லீறுப்புண் பசியின்மை, முதலியனவும் தீரும். பழத்தை சிறிது சுடு நீர் விட்டுப் பிசைந்து வடித்து, உடன் இரு பங்கு சர்க்கரை கூட்டி பாகாக்கி அதில் ஏலரிசி, சாதிக்காய், சாதிப்பத்திரி, கிராம்பு குங்குமப் பூ, இவற்றைப் பன்னீர் விட்டரைத்துக் கலக்கிக் கொண்டு வேளைக்கு ஒரு அவுன்சு வீதம் உட்கொள்ள உட்சூடு, பித்தம், மயக்கம், வாய் விரணம் முதலியன தீரும்.

❋❋❋❋❋❋❋❋❋❋❋

## வெள்ளரிப் பிஞ்சு

வெள்ளரிப் பிஞ்சுடன் எலுமிச்சம்பழச் சாற்றையும் சிறிது உப்பையும் தொட்டு அருந்தச் சீரணத் தொடர்பான பல நோய்கள் நீங்கும் தேனில் தொட்டு அருந்தி வர உடல் வலுப்படும்.

❋❋❋❋❋❋❋❋❋❋❋

பழச்சதையை விஷப்பூச்சிகளின் கடிவாயில் தடவிவர நஞ்சு இறங்கும். பழத்தை பாண்டு, சோகை, காமாலைப் பிணிகட்குரிய இலேகியங்களில் கூட்டப் பயனுண்டு.

விளாம்பழ ஓடு:-

அரைப்பலம் எடையுள்ள விளாம்பழத்தின் ஓட்டைச் சிதைத்து அரைப்படி நீர்விட்டு எட்டிலொன்றாகக் குறுக்கி வடித்து சர்க்கரை கூட்டிஅருந்திவர இடுமருந்தின் தீங்காகிய இருமல், மயக்கம் அறிவின்மை முதலியன தீரும். இதற்கு ஓட்டுடன் ஒரு பழத்தையும் அரைத்துக் கொடுப்பதுண்டு. விட்ட தடி ஆசை விளாம்பழத்து ஓட்டோடு என்ற கூற்றுக்கு உள்ளாகும். இவ்வோட்டை பித்தக் குடிநீர்களில் கூட்ட நற்பயன் கிட்டும்.

விளாம் பிசின்:

உள்ளழலாற்றியாகிய விளாம் பிசினைத் தூய்மைப் படுத்தி தூளாக்கி மாத்திரை முதலியனவாக்கி உட்கொள்ள நீடித்த கழிச்சல், வெள்ளை பெரும்பாடு, நீரிழிவு ஆகியன தீரும். இப் பிசினைப்பொடித்து தேன் (அல்லது) எருமைத் தயிருடன் கொடுக்க சீதக்கழிச்சல் செரியாக்கழிச்சல் நிற்கும். காது வலிக்கும் ஒரு துண்டு பிசினை வாயிலடக்கி அதினின்று ஊறும் சாற்றை விழுங்கிக் கொண்டிருக்க வரட்டு இருமலும், நெஞ்செரிவும் நீங்கும் இதற்கு நாலு பங்கு பிசின் நன்கு கரைந்து நீரில் சேர்ந்தபின் துணியில் வடித்து ஒன்றரைப்பலமளவில் மும்முறையும் அருந்திவருவதாலும் பயனுண்டு- விளாம் பிசின் ஒட்டு எருவைக்குப் புண்கள் ஆறும். இப்பிசின் மாத்திரைக்கு நீர் வேட்கை, உட்சுரம், வெள்ளை முதலியன விலகும்- விளாம்பிசினைப் பலதாது விருத்தி இலேகியங்களில் கூட்டுவதுண்டு.

விளாவேர், ஆவாரைவேர் பூலாவேர், காட்டுமல்லி வேர், இலவங்கம் இவை சமன் கூட்டி எருமை மோரில் வேகவிட்டுத் தயிரில் கலந்து அருந்த மிக்க நீரிழிவு தீரும். நிற்க. அனைவராலும் விரும்பியுண்ணப் பெறும் விளாம்பழத்தினால் பித்தப் பிணிகள் பலவும் தீருவது உறுதி

❋❋❋❋❋❋❋❋❋❋❋

## மாகாளிக் கிழங்கு!

---

இது பசியை உண்டாக்கும் உடல் வாயுக்கோளாறுகளை நீக்கும். ஜீரண சக்தியை உண்டாக்கும்.

❋❋❋❋❋❋❋❋❋❋❋

# நாக்கின் தன்மைகள்!

சாதாரணமாக நாக்கானது சுத்தமாகவும், சிவந்த நிற முடையதாகவும் இருக்கவேண்டும். நாக்கில ஈரம் குறைந்திருந்தால் ஜீரணபாதிப்பையும் பலவிதமான சுரங்களையும் காட்டும்.

வெகு நாட்களாக வெடிப்பும் ரணமாகவும் இருந்தால், மேக வியாதியைக் காட்டும்.

நபக்கு முழுவதும் உலர்ந்து, கொஞ்சம்கூட பசையில்லாமலிருந்தால் ஜன்னி முதலிய வைகளைக் காட்டும், நாக்கில் மாவு படிந்திருந்தால், அக்னி மாந்தத்தையும், மலச்சிக்கலையும் காட்டும்.

நாக்கின் மத்தியப் பகுதியில் மாவு மாதிரியாகவும், ஓரமும நுனியும் சிவப்பாயிருந்தால், ஜன்னி சுரத்தின் அடையாள மாகும்.

ஜன்னி சுரத்தில் சில சமயங்களில் நாக்குஉலர்ந்தும்வெடித்தும், ரணமாயும் காணப்படுப.

முற்றிப்போன ஜன்னியில் நாக்கில் முள் போன்ற சில கிரந்திகள் ஏற்படும்.

நாக்கு முழுவதும் உலர்ந்து, மஞ்சள் நிறமாயிருந்தால் உடலில் பித்தம் அதிகமாக இருக்கும்.

நாக்கு முழுவதும் சிவப்பாக இருந்தால் வாதம் அதிகமாக இருக்கும்.

நாக்கு வெண்மையாயிருந்தும் உடலிலுள்ள சிலேத்துமத்தையும் காட்டும்.

வாயிலிருந்து (அ) நாக்கிலிருந்து உமிழ்நீர் சுரந்தால், மேக வியாதி சிலேத்துமவியாதி காச வியாதி இருப்பதையும் காட்டும்

நாக்கின் மேல் தோல் வெடித்திருந்தால், உஷ்ண வியாதி இருப்பதைக் காட்டும்.

நாக்கு முழுவதும் மேல் தோல் உரிந்து, இரணமாயிருந்தால் காசவியாதி T. B. இருப்பதாகக் கொள்ளலாம்.

நாக்கு நீலவர்ணமாயும், அதன் அடியில் பெருத்த சிரைகள் தோன்றினல்; இது இருதய வியாதியின் அறிகுறியாகும்.

நாம் பேசுவது தடைப்பட்டு, நாக்கு குளறினல் அது நரம்புத் தாக்குதலுக்கு (STROKஈ) அடையாளமாகும்.

# மறு பிறப்பு என்பது உண்டா!

மிக நளினமான இயக்கங்கள் முதலில் ஆத்மாவைப் பாதிப்பதில்லை எனவே மனிதன் சற்று கனமான பொருள்களான உறைகளையணிந்து காள்கிறன் தொடர்ந்து மனேமய உடல் (Mental Body) ஆக்கும உடல் (Astral Body) பௌதிக உடல் (Physical Body) போன்ற உடம்புகளை எடுத்துக் கொள்ளுகிறன். இதுவே பிறப்பு எனப்படுகிறது. அப்போது பௌதிக வாழ்வு ஏற்படுகிறது. அந்த பௌதிக உடம்பின் மூலம் அடையக்கூடிய அனுபவங்கள் முழுவதும் அவனுக்கு ஏற்படுகிறது.

ஒரு குறிப்பிட்ட கால அளவிற்குப்பின் அவன் தனக்குள் தானே அடங்கி விடுகிறன். இப்போது அவனைச் சுற்றியிருந்த உறைகளை ஒவ்வொன்ருக வீசியெறிகிறன். இவற்றுள் அவனால் முதலாவதாக எறியப்படுவது இப்பௌதீக உடம்பே இன் உள்ளிருந்து அவன் விடுபடுவதையே நாம் மரணம் என்கின்ருேம். இம்மானம் என்பது, அவனுடைய எல்லா செயல்களுக்காகவைக்கப்படும் முற்றுப்புள்ளியல்ல. அவன் ஒரு பருவத்திலிருந்து மீண்டிருக்கிறன். அதனால் ஏற்பட்ட விளைவுகளையும், தன்னுடனே கொண்டு வருகிறன். ஒரு குறிப்பிட்ட கால ஓய்விற்குப் பின், மீண்டும் வேருெரு முயற்சியில் ஈடுபடுகிறன்

அவனது வாழ்வு என்பது அவனுடைய விரிந்து பரந்த வாழ்விலே. வருகின்ற ஒரு நாள் மட்டுமேயாகும். இம் மிகச் சிறிய வாழ்வில் குறைந்தது எண்பது ஆண்டுகள் வாழ்கின்ருன். இக்குறுகிய காலத்திற்குள் அவன் கற்கவேண்டிய அனைத்தையும் கற்றுவிட முடி

உ

யாது. எனவே, தான் விட்டுச் சென்றதைக் கற்று முடிப்பதற்காக, மீண்டும் மீண்டும் பல முறை இங்கு வரவேண்டிய அவசியமேற்படுகிறது. இவற்றின் தொகுப்பையே நாம் பிறவிகள் என்கின்றோம்,

எல்லாப் பாடங்களையும் நாம் முழுமையாகக் கற்பதுவரை, பல வகுப்புக்களில் பல சூழ் நிலைகளில் நாம் வாழ்ந்தே தீர வேண்டியுள்ளது இத் தேர்வில் நாம் வெற்றிபெற்றால் இதைவிட உயர்ந்த நிலைக்கு நாம் செல்கின்றோம் எனவே அவ்வுயர்ந்த நிலைக்குச் செல்வதற்கு நம்மைதகுதிப்படுத்தும் சோற்களமே இம் மண்ணுலகம் இதுவே மறுபிறப்பு எனப்படுகிறது.

இப்போது நாம் நடத்தும் பௌதீக வாழ்க்கை நம் முதல் வாழ்க்கையல்ல. நாம் ஒவ்வொருவருக்குப் . பின்னும் நீண்ட சங்கிலித்தொடர் போன்ற பல வாழ்வுகளுள்ள ஒரு மிக நீண்ட வாழ்க்கைத் தொடர்ச்சி ஒன்றுண்டு. மேலும் பழங்காலத்திலிருந்து இன்று வரை நாம் பெற்ற பல்வேறு அனுபவங்கள் மூலம்தான் இன்றைய நிலையை நாம் அடைந்துள்ளோம். நிச்சயமாக, நம் அறிவுக்கெட்டாத முந்தைய பிறவிகளில் நாம் நல்லதையும் மாறி மாறி செய்திருப்போம். அவை இரண்டும் குறிப்பிட்ட அளவு, மாற்ற முடியாத நீதிச் சட்டத்தின் கீழ் பல பிறவிகளில் நம்முடன் தொடர்ந்து வருகின்றன. நன்மைகள் அதிகமாகும்போது, துன்பம் தொடர்கிறது அரை குறை வாழ்க்கை அமைகிறது.

நம் மில் குறை ஏற்படுவதற்கு நாமேதான் முதல் காரணம்! நாமேதான் அதற்கு சொந்தக்காரன். வேறுயாருமில்லை! இப் பிறவியில் துக்கத்தையும், துன்பத்தையும் நாம் சுமக்க வேண்டியிருக்கிறதென்றால், அதற்கு முழுமுதற்காரணம் நாமேதான் அவன் முந்தைய பிறவிகளில், செய்த நன்மை தீமைகளுக்கேற்ப, மீதியிருப்பவை என்றும் மாற்ற முடியாத கணக்கோடு, பிறவி தோறும் அவனை எதிர் நோக்கி நிற்கின்றன. அந்த தெய்வ நெறிச் சட்டத்தைக் குறிவைத்தே அனைத்தும் சுழல்கின்றன.

(ஆதாரம்: பிரம்ம ஞானத்தேன் என்னும் நூல்)

✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻--✻✻✻✻✻✻✻✻✻✻

# புழுவெட்டா?
# சர்ப்பவெட்டா?

✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻-✻✻✻✻✻✻✻✻✻

ஊரோமம் உதிர்வதுடன், வெங்காயச் சருகைப்போன்று சர்மம் வெளிப்படுவதற்கு உரோமச்சட்டை வெளிப்படுதல் என்று பெயர். இது, தலை புருவம், தாடி முதலீயவிடங்களிற்காணும்.

தலை முதலியஸ்தானங்களில் குழிகுழியாக மயிர் உதிர்வதற்குப் புழு வெட்டென்று பெயர்.

தலை முதலிய ஸ்தானங்களில் நீண்ட வடிவமாய் மயிருதிர்ந்திருப்பதற்குச் சர்ப்ப வெட்டு என்று பெயர்.

## காரணம்:

மேற்கண்ட மூன்று வகைகளுக்கும் காரணம் ஒன்றேயாம். இவை அதிக உக்கிரமானது. நீர் அந்தஸ்தானங்களில் தங்கிவிடுவதால், மேற்கண்ட குணங்களுண்டாகும். இந்தத் துஷ்ட நீரானது தேகத்தின் சருமத்திலும் உரோமக் கால்களிலும், உரோமத்தை வளர்க்க ஆதாரமாகிய சத்தை அங்குச் சேரவிடாமல் எரித்துத் தகித்து விடுவதால், உரோமம் வளர அல்லது உண்டாக ஏதுவில்லாமற் போகிறது. இதில் மெல்லிய பாம்புச்சட்டையைப் போன்ற தோல் உரிவதனாலும் பாம்பைப்போல் நீண்ட உருவமாயிருப்பதாலும், சர்ப்ப வெட்டெனப் பெயரிடப்பட்டிருக்கிறது. பித்தம், வாதம் முதலிய தோஷங்கள் அதிகரித்து விஷமித்துப் போவதால் இது உண்டாகிறது. கபநீர் அதிகரித்து விஷமித்துண்டானால் அங்கு வெளுத்திருப்பதே அதன் அறிகுறியாம். மேற்கண்ட தோஷங்கள் தனியே விஷமித்து வியாதிக்குக் காரணமாயிருப்பது போலவே இரத்தத்துடன் சேர்ந்து அதைக்கெடுத்து இவ் வியாதிக்குக் காரணமாக்குவதுமுண்டு.

(ஆதாரம்: வசீகர விருத்தி போதினி)

# இரைப்பு நோய்

டாக்டர்: சிற்சபை,

## நோய்க்கான காரணங்கள்:

உடலுக்கு ஒவ்வாத உணவு அருந்தலாலும், பொருந்தாத செயல்களாலும் உடல் வன்மை குன்றியுள்ள நேரங்களில் கபத்தை அதிகப்படுத்தக் கூடிய உணவை உண்பதாலும் குளிர்ந்த நீரில் கழுத்து வரைக் குளிப்பதாலும், குளிர் காற்று உடலில் படும்படி இருந்தாலும் புல், பூண்டு, நெல், கேழ்வரகு முதலியவற்றின் சுணையினாலும் நறுமணம் துர்நாற்ற முடைய பொருட்களை மோப்பதாலும் இந்நோய் பிறக்கின்றது.

## வகைகள்:

இது, வாத இரைப்பு நோய், கப இரைப்பு நோய், கப்வாத இரைப்பு நோய், மேல்நோக்கு நோய் என ஐவகைட்படும்.

## நோயின் குணங்கள்:

(அறிகுறிகள்)

மூக்கடைப்பு, மூக்கு நீர் பாய்தல் முதலியன உண்டாகப் பிறகு மார்பு அடைப்புபோலத் தோன்றும். மூச்சு வெளியிட முடியாமல் மிக்கவேதனையைப் பிறப்பித்து துன்புறுத்தும், சில சமயங்களில் மூச்சை வெளியிட முடியாதபடி மார்பை இழுத்துப் பிடித்து, உயிர் போய் விடுமோ என சிந்திக்க வேண்டிய நிலைக்கு வந்துவிடுவதுமுண்டு. இந்நிலையில் சற்று கிருமிக் கோழை வெளிப்படின் ஒருவாறாக விடுதலை ஏற்படும். இழுப்புள்ள சமயத்தில் இருமலும் வாராமல் சளியும் வெளிப்படாமலிருப்பின் நோயாளி மூச்சுவிட முடியாமல் தவித்துப் படுக்கவும், இருக்கவும் முடியாதபடி திணறிப் படுக்கையை விட்டு எழுந்து நிற்பான்,

நெற்றியில் வியர்த்தல், முகங் கருத்தல் கால் சில்லிடுதல், மூச்சுத் திணறல், கண் வீங்கியது போலத் தோன்றல், உடல் நடுக்கம், பெருமூச்செறிதல், படுக்கையில் பொருந்தாமை முதலிய குறிகுணங்களைத் தோற்றுவிக்கும்

இந்நோயில் வெளிப்படும் சளி நுரைத்து, அளவில் மிகுந்து கனமற்று இருப்பின் இது வாதத்தால் வந்ததென்றும், வெளுத்து சீழ்கலந்தது போலவும், மஞ்சள் நிறத்தோடுமிருப்பின் பித்த தோஷத்தால் தோன்றியது என்று அறிக.

## இதற்கான மருத்துவம்:

வேற்றுநிலை வளர்ச்சியடைந்த கபத்தையும் மற்ற இரு தோஷங்களையும் தன்னிலைப்படுத்தவும், உதான வாயுவின் வன்மையைக் குறைக்கவும் முதலில் பேதிச் சிகிச்சையைக் கையாள வேண்டும். பிறகு நேர் மருந்துகளை உட்கொள்ள வைத்தலும், உணவு முறைகளைப் பின்பற்றச்செய்தலும் வேண்டும்.

பேதிப் பரிகாரத்திற்குச் சஞ்சீவி மாத்திரை, மாந்த எண்ணெய் போன்றவைகளை நோயின் வன்மைக்கும் பொருதுமாறு அளவோடு தருதல் வேண்டும். பிறகு கஸ்தூரிக் கருப்பு, தாளகக் கருப்பு, தாளக பற்பம் வசந்த குசுமாகர மாத்திரை பவழபற்பம், தாமிரச்செந்தூரம் பூரண சந்திரோதயம், சாம்பிராணி பதங்க மாத்திரை போன்றவைகளையும் அளவுடன் பொருத்தமான துணை மருந்தோடு வழங்க வேண்டும்.

ஆடாதோடை மணப்பாகு குடிநீர், கண்டங்கத்திரிலேகியம் ஆகியவையும் ஆகும்.

## உணவு:

நோயுள்ள காலத்தில் நீர் வடிவமான கஞ்சி போன்றவை களையும், நோய் நீங்கின பிறகு நோயாளிகளுக்கு ஒவ்வாத பொருள்களையும் கபத்தையும் வாதத்தையும் விருத்தி செய்யக் கூடிய பொருள்களையும் நீக்கி, மற்றவற்றைப் பயன்படுத்த லாம்.

## குறிப்பு:

தற்போது இரைப்பு நோய் என்னும் ஆஸ்துமா வியாதிக்கு அந்த நேரம் மட்டும் துன்பம் நீங்கப் பல நவீன மாத்திரை மருந்துகள் வந்திருந்த போதி லும் அவற்றுள் எதுவும் நிரந்தர பயனளிக்கக் கூடியதாக இல்லை சித்த மருத்துவத்திற்கே மிகவும் புகழைத் தேடித் தரும் மூப்பு முறையினால் முடிக்கப்பட்ட மருந்தொன்று சிற்சபை மருந்த கத்தில் காஞ்சியிலும் சென்னை யிலும் கிடைக்கும். அதனை வாங்கிப் பயன்படுத்தி இரைப்பு நோயை என்றைக்கும் தலை காட்டாமல் குணமாக்கிக் கொள்ளுங்கள்

# மூலம் பவுத்திரத்திற்குக் கிஷாய வகைகள்



நன்னாரி வேர்
முருவிலி வேர்
நிலக்கடம்பு
பூவத்தி வேர்
மிளகாரணை வேர்
செம்முள்ளிவேர்
சங்கம் வேர்
கத்தாழைச்சாடு
சாரணை வேர்
விகுவி வேர்
அவுரி வேர்
சிறுகுறிஞ்சா வேர்
சிவகரந்தை வேர்
வெள்ளறுகு
விஷ்ணுக்ராந்தி
பிரமியப்பூண்டு
கருவேலம் இலை

முதலான மருந்து சரக்குகளுடன்

திப்பிலி
பெருங்காயம்
சதகுப்பை
சிறுதேக்கு
கடுக்காய்த்தோல்
நிலவேம்பு
வெங்காரம்
சுக்கு
கருஞ்சீரகம்
திப்பிலிமூலம்
வேப்பம் பிசின்
குராசானிஓமம்
வில்வப்பத்திரி
பேய்ப்புடல்
கடுகுரோகிணி
மிளகு
வசம்பு
பூண்டு

இவைகளை வகையொன்றுக்கு அரை பலம் வீதமெடுத்து, முன் சரக்குகளும் அரை பலம் வீதமெடுத்து எல்லாவற்றையும் ஒன்றிரண்டாக இடித்து விட்டு 8 மடங்கு தண்ணீர் விட்டு எட்டில் ஒன்ருக காய்ச்சி இறக்கி வடிகட்டித் தினம் 3 வேளை 1 அவுன்சு வீதம் உட்கொள்ளவும்.

மூலம், பவுத்திரம் முதலான ரோகங்கள் தீரும் 20 நாட்கள் உபயோகிக்கவும்.



# பரம்பரை மூலிகை மருத்துவம்!

திருநகரி டாக்டர்: ஏ. கோவிந்தசாமி,
செம்பனார் கோவில்

சுமார் ஆயிரக்கணக்கான ஆண்டுகட்கு முன்பே சித்தர்களின் விஞ்ஞானம், அவர்கள் மனித சமுதாயத்திற்கு செய்திருக்கும் நன்மையெல்லாம் மெய் சிலிர்க்க வைக்கிறது, அவர்களின் தொண்டு மக்கள் நோய்கள் இல்லாமல் வாழ்வதற்காக, இன்பத்துடன் வாழ்வதற்காக துன்பங்களிலிருந்து விடுதலையடைவதற்கு, பல நல்ல வழிகளை ஆராய்ந்தனர், அவர்கள் கண்டறிந்த உண்மைகளை ஆராய்ந்து தெளிந்தனர். அவர்கள் அறிந்த உண்மைகளை, மனித சமுதாயத்துக்கு தெரிவித்தனர். அவர்கள் அறிந்த விஞ்ஞானம் மக்களின் நல் வாழ்விற்காகவும், அழிவிலிருந்து காப்பாற்றவும் பயன்படுத்தினர். அவர்கள் கண்டறிந்த ஆராய்ச்சியின் பலனாக இன்றும், ஏன், என்றும் நாம் அனுபவிப்போம். ஆனால் இன்று அறிவு வளர்ந்து ஆற்றல் வளர்ந்து, திறமை வளர்ந்து இருக்கின்ற காலத்தில் உற்று நோக்கில் இன்றைக்கு இருப்போமா, நாளைக்கு இருப்போமா என்று ஏக்கம் நம் மனதிலே உலகத்தில் அத்தனைமக்களுக்கும், ஏக்கம் ஏனோ ஏற்படுகிறது. கண்டம் விட்டு கண்டம் பாயும் ஏவுகணைகள் அணுகுண்டுகள் எரிவாயு குண்டுகள் மக்களை நொடியில் அழிக்கக் கூடிய ஆயுதங்களை அளவுக்கு மீறி செலவு செய்கிறுர்கள், மக்களின் நல்வாழ்விற்கும் அவர்கள் மகிழ்ச்சி வளமிக்கதாக இருப்பதற்கு, விஞ்ஞானம் செயல்படவில்லையே என்ற ஏக்கம் நமக்கு சித்தர்களின் ஏக்கமெல்லாம் மனிதனுடைய வாழ்க்கை வளத்துக்கே கண்டு மக்களிடம் அற்பணித்தனர் கொஞ்சம் சிந்தனை செய்து பார்த்தால், நமது சித்தர்கள் தீய சக்திகளுக்கு செலவிட்டு வீணாக்கவில்லை, நல்வழிக்கு அவர்கள் வெற்றியும் கண்டார்கள்.

## சித்தர்கள் எவர்:

சித்தர்களின் பெருமை பல அற்புதங்களை செய்யக் கூடிய வர்கள். புராணம் படித்தவர்கள் மட்டமான உலோகங்களை உயர்ந்த பொன்னாக்கும் திறமை படைத்தவர்கள் சித்தர்கள் என்றுதான் அறிவார்கள்.

சித்தர்கள் சாகா நிலை பெற்றவர்கள். உடம்பை அழிந்து போகாமல் பாதுகாக்கும் வழியை பெற்றவர்கள். தம்முடைய உடம்பை அப்படியே வைத்து விட்டு வேறு ஒரு உடலில் புகுந்து நடமாடும் சக்தி படைத்தவர்கள். சித்தர்களுக்கு வான மார்க்கமாக செல்லும் ஆற்றல் உண்டு. முக்காலங்களையும் அறியும் ஞானம் உண்டு. பல வித அற்புதங்கள் செய்யும் ஆற்றல உண்டு என்பதால் அவர்களை சித்தர்கள் என்று கூறுகின்றனர்

சித—அறிவு சித்தை உடையவர்கள் சித்தர்கள் சித்தம் அறிவு என்ற பொருளும் உண்டு. ஆகவே சித்தர்கள் என்றால் அறிவு படைத்தவர்கள், அறிஞர்கள், மேதைகள், பேரறிவு படைத்தவர்கள், நுண்ணறிவு படைத்தவர்கள், விஞ்ஞானிகள், மெய்ஞானிகள் என்று சாலச் சிறந்தது.

## சித்தர்களின் பணௌன்ம ஆராய்ச்சி

சித்த வைத்தியம் தென்னிந்தியாவில் சையாளப்படும் வைத்தியம். முக்கியமாக தமிழர்கள் வைத்தியம் உலோகங்களையும், தாதுகளைவைத்து பஸ்பம் செந்தூரம், திராவகம் முதலிய வகைகள் தமிழ் முறைகளின் படி உலோக ரச வர்த்தகங்களை நீற்று பஸ்ம செந்தூரங்களை செய்யலாம்.

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

## கண்டங் கத்திரி!

இந்த மூலிகை உடலில் ஏற்படும் சோர்வு, இருமல், சளி முதலியவற்றை குணப் படுத்தும். கண்டம் என்ருல் 'முள்' என்று பொருளாகும் இந்த இலைச் சாற்றுடன், தேன் கலந்து சமமாய் கொடுக்க சிறுநீர் நன்கு பிரியும்.

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

செய நீரால் பாசான முதலிய வைகளை கட்டி பல அனமா னங்களில் சன்னி, வாதம் வாத ரோகம் மிகவும் கடுமையுள்ள வர்களுக்கு கொடுத்தால் குணம் உண்டாகும். கட்டு மருந்து கள் மிகச் சிறிய அளவே, இரு வேலைகளுக்கு மேல் உபயோ கிப்பதில்லை. நூற்றுக்கணக் கான முறைகள் தமிழ் மருத்து வத்தில் உண்டு.

தமிழ் மருத்துவத்தில் நாடி களை பார்த்து, நேரம் இன்ன தென்று அறியும் முறை சித்த வைத்தியர்களுக்கு உண்டு. சித்தர்களின் கொள்கை மக்கள் சாகாமல் வாழலாம் என்பது. நீண்ட நாள் வாழலாம் என் பது. இதற்காக பயிற்சிக்கான கல்பம் மருத்துவ நூல்களில் அறியலாம். வானத்தைப் பார்த்து, காலத்தை அறிந்து பருவ நிலை அறிந்து மருந்து களை கண்டறிந்து கொள் வதற்கு ஜோதிடம், வான சாஸ் திரம், மந்திரசக்தி தேவயாக இருந்தன.

பச்சிலை, வேர் கிழங்கு, காய் விதை எல்லா காலங்களிலும் கிடைப்பதில்லை. ஒவ்வொரு காலத்தில் தான் கிடைக்கும். அந்நிலை அறிய ஜோதிடம் மருந்துகை புடமிடுவதற்கு

பருவ காலம் நோயாளிகளுக்கு மருந்து கொடுக்கும்போதும் பருவ காலம்அறிந்து கொடுத்த னர். இதனால் சித்த வைத்தியம், ஜோதிடம், மந்திரம், மந்-மனசு திரம் உறுதி. மனத்தை உறுதியாக்கி கொள்வதே மந்திரமாகும். தன்-திரம். தன்னை உறுதியிலே நிறுத்திக் கொள்வது தந்திரமாகும். சித்தர்கள் உள்ளத்தில் உறுதி பூண்டவர்கள் அஞ்சாமை கலங்காமை ஒரு நிலையில் நின்றவர்கள் ஒரு நிலையிலேயே அஞ்சாமல் நிற்பதற்கு மந்திரங்களை உச்சரிக்கும் முறைகளை பழகியிருந்தனர். மந்திர தந்திர தொடர்புடையவை காடு மலைகளில் மருந்து மூலப் பொருள் தேடுவதற்கு அவசியமாய் இருந்தன என்று கூறுகின்றார்கள் சித்த வைத்தியம் சீன நாட்டுக்குப் நெருங்கிய தொடர்புண்டுசித்தவைத்தியத்தில் தீர்க்க முடியாத வியாதி இல்லையென்று கூறலாம். சித்தர்கள் கண்டறிந்தது சிறந்த ரசாயன ஆராய்ச்சியாகும்.

உலோக வகை உப்பு வகை, பாசான வகை, வேர், பூ, காய், இலை, விதை வகைகள், முத்து பவளம், கடல் பகுதி திரவியங்கள், பிராணிகள் உடம்பிலே உற்பத்தியாகும் கோரோசனை,

## உலகப் பழமொழிகள்

- தாயின் இதயம், குழந்தையின் பள்ளிக்கூடம்.

  — அமெரிக்க பழமொழி

- ஒருபொருளை அடகு வைப்பதை விட விற்று விடு.

  — அரேபிய பழமொழி

- அறிவுள்ள குழந்தை மகிழ்ச்சி யுள்ள தந்தையை உருவாக்குகிறது.

  —ஆஸ்திரேலிய பழமொழி

- அழகான பெண்ணும், நீண்ட கிழிசலுள்ள ஆடையும் எந்த ஆணியிலும் மாட்டிக் கொள்ளும்.

  — இங்கிலாந்து பழமொழி

- பொறுமை உடையவனுக்கே உலகம் சொந்தம.

  — இத்தாலிய பழமொழி

- நெருங்கிப் பார்த்தால் — வெகு சிலரே மதிப்புக்குரியவர்கள்

  — கிரேக்க பழமொழி.

- பணம் சம்பாதிப்பவன் பெரிய மனிதனல்ல! அதை பாதுகாப்பவனே பெரிய மனிதனாகும்.

  — பின்லாந்துப் பழமொழி

- முதன்மையான அன்பு தாயன்பு; அடுத்தது நாயன்பு அதற்கும் அடுத்தது தான் காதலியின் அன்பு!

  —போலந்து பழமொழி

- தன்னை அறிவது அறிவு! தன்னை மறப்பது மடமை

  — ஜெர்மன் பழமொழி

கஸ்தூரி, மூத்திரம், மலம், முதலியவைகள் பண்டங்களின் பண்புகளை அறிந்ததினால் இன்னென்ன சரக்குகளை சேர்ந்து மருந்துகளை செய்ய லாம் என்று அறிந்தனர். இன்ன மருந்து இன்ன நோய் தீரும் என கண்டறிந்தனர். ஒரு ஒரு நோய்க்கு பல மருந்து உள்ளுக்கு மருந்து, உடம்பில் பூச மருந்து, நீண்ட நாள் வாழ மருந்து. இவ்வாறு பல வகை மருந்துகளை கண்டறிய துணை செய்யும் ரசவாதம் ஆராய்ச்சியே.

இன்று இருப்பதுபோல் பரி சோதனை சாலை, கருவிகள் வசதிகள் அக்காலத்தில் இல்லை. அந்த நிலையில், காட்டிலும், மலையிலும், குகையிலும், குகையிலும் வாழ்ந்த அறிஞர்கள் சித்தர்கள். தங்கள் ஆராய்ச்சிகளை நடத்தி உள் ளார்கள். அவர்கள் செய் திருக்கும் ரசாயன ஆராய்ச்சி இன்றைய விஞ்ஞானத்திற்கு ஒத்திருப்பதை காணும்போது வியப்பை தருகிறது. பால்வகை தண்ணீர்வகை, பிராணிகளின் கறிவகை, படுக்கை முறை. மனிதன் நீண்ட ஆயுளுடன் வாழ இவைகளின் குணநலன் கள் அனைத்தும் எழுதிய சித் தர்களின் ஆராய்ச்சி நம்மை யெல்லாம் ஆராய வைக்கிறது. அத்தகைய ஆராய்ச்சி செய்த அவர்களை அறிஞர், சித்தர், மகான், தியாகி, முனிவர்கள் என்று போற்றுவதில் தவறில் லையே. ஏன் நீங்களும் சிந்தி யுங்களேன் பார்க்கலாம்.

## தாய்ப்பால்

தன்னய மென்றோர் சர்வதோஷங்களும் போச்
உன்னியதாயெம் மொழியும் காண் — சந்நிரேயடு
வாதசுரம், பித்த சுரம், வன் கபச் சுரம் தணியுங்
கோதில் வலுமையுண்டதங் கூறு.

இது தாய்ப்பாலின் பாடல் மகிமை. ஆங்கில மருத்துவர் ஏற்கெனவே ஆரம்பத்தில் தாய்ப்பால் கொடுக்காதீர்கள். நிறுத்திவிட்டு பால்பவுடர் கொடுங்கள் என்பர். பிறகு காலம் காலம் மாற அவர்கள் இப்பொழுது தாய்ப்பாலின் மகிமையை ஆராய்ந்து தாய்ப் பால் [illegible]

கூடாது. தாயின் பால் பிள்ளைக்கு இன்றியமையாதது. இப்பொழுது அடிக்கடிவானொலியும் ஒலபரப்புவதில் நாமும் கேட்கிறோம். ஆனால் அனுபவ சித்த வைத்தியர்களின் அறிவு கொஞ்ச காலம் மக்கள் நம்மை தள்ளி வைத்தார்கள், தாய்ப்பால் சிறந்த வலிமையை கொடுக்க வல்லது. சிறந்த அறிவையும் ஆற்றலையும் தர வல்லது நீண்ட ஆயுளையும் சகல நோய்களையும் தடுக்க வல்லது. இந்த தாய்ப்பாலின் மகிமை கி.மு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே நமது சித்தர்களின் ஆராயச்சியின் மகிமையை பார்த்தீர்களா நமது சித்தர்களின் இந்த பால் ஆராய்ச்சி ஆங்கிலம் மருத்துவத்தைவிட உயர்ந்தஆராய்ச்சி என்பதே என் கணிப்பு.

## யோகப் பயிற்சி பலன்

ஆயுள் கொடுப்பாள் நீரிழிவு முதல்
கண்டன மற்ற வியாதிகள் எல்லாம்
பிசாசு பறந்திடும் பில்லி போல — அடி
பத்தினி லெலைப்பெண் பேரைச் சொன்னாள்

நீரிழிவுக்கு வியாதிக்கு யோகப் பயிற்சி மருந்தாக இன்றைய நவீன விஞ்ஞானமே ஏற்றுகொள்கிறது. ஒப்புக்கொண்டுள்ளனர் இந்த முறை ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு நமது சித்தர்களால் கண்டுபிடித்தது வியப்புக்குரியது. நீரிழிவிற்கு யோக பயிற்சி சிறந்த மருந்து என்பது சித்தர்களின் கருத்து யோகப் பயிற்சியில் காலனையும் வெல்லலாம். சித்தர்கள் பாடிய பாட்டில் காணலாம்.

❋❋❋❋-❋❋❋-❋❋❋

## பிரண்டை!

இந்த மூலிகையானது குன்மம், மூலவியாதி, வயிற்றுவலி இரத்தபேதி, இரத்த மூலம் மாந்தம் முதலியவைகளை குணப்படுத்தும் சக்தியுடையது.

❋❋❋❋❋❋❋❋❋❋

## வேப்பம் பூ!

இந்த வேப்பம் பூவுடன், மூன்று மிளகு வைத்து அரைத்து, சுண்டைக்காய் அளவு கொடுக்க, குழந்தை வயிற்றுள்ள, வயிற்றுக்கிருமிகளெல்லாம் வெளிவந்து விடும்.

❋❋❋❋❋❋❋❋❋❋❋

நற்காதுக்கு தூதுவளை! நரப்புக்கு பசலை!

# 'காது சீழ் வடிதல் குணமடைய'!

(Dr. தேவூர் மணிவாசகன்,)
மன்னார்குடி-614001

---

நீண்டகாலமாக காது சீழ் ஓடிக்கொண்டு, காசும் ஓடிக் கொண்டு, பல மருத்துவர்களை தேடிக்கொண்டு, காலமும், காசும் ஓடியதுதான் மிச்சம். இனிமேல் வேண்டாம் அச்சம். மூலிகைகளால் கிடைக்கும் பலனே உச்சம்.

Herbal method is the chief and cheap method

காசநோய் உடல்வாகு உள்ளோர்க்கு வரும், காது சீழுக்கு கூடுதல் சிகிச்சை தேவைப் படுகிறது. காது சீழுக்கு முறையான சிகிச்சை செய்யாவிட்டால், காது கேட்கும் தன்மை குறைவு, மூளை பாதிப்பு ஆகியன ஏற்படும்.

உள் நாக்கு வீக்கம் (டான்சில்ஸ்) உள்ளவர்களுக்கு வரும் இந்நோய்க்கு அதற்கு உரிய சிகிச்சை செய்ய குணமாகும்.

காலை, மாலை துளசி டீ குடிக்கவும்.

குழந்தைகளுக்கு 10 சுண்டை வற்றல் வறுத்து பொடியாக்கி சாதத்தில் கலந்து கொடுக்கவும் பெரியவர்கள் 20 சுண்டை வற்றல் வறுத்து சாப்பிடவும்.

முள் நீக்கிய தூதுவளை இலைகள் 3 வேப்பங்கொழுந்து 5 மிளகு 1 சேர்த்து அரைத்து சாறாக்கி வடிகட்டி தேன்கலந்து காலை, மாலை இருவேளை குழந்தைகளுக்கு கொடுக்கவும்

பெரியவர்கள் தூதுவளை இலைகள் 5, வேப்பங்கொழுந்து 10, மிளகு 2 சேர்த்து மென்று சாப்பிடவும்.

தேங்காய் எண்ணெய் 100 மிலி ஊமத்தன் இலைச்சாறு 50 மிலி கலந்து காய்ச்சி வடிகட்டி வைத்துக்கொள்ளுங்கள். காதுகளை பஞ்சினால் சுத்த

மாக துடைத்துவிட்டு காலை, மாலை 3 சொட்டுகள் காதில் விட்டுக்கொள்ள வேண்டும்.

தூதுவளை ரசம், தூதுவளை துவையல், தூதுவளை ரொட்டி இவற்றில் ஏதேனும் ஒன்று தின சரி உணவில் இடம் பெற வேண்டும். மேற்கண்டுள்ள சிகிச்சை முறைகளால் காது சீழ் நிரந்தரமாக நிற்பதோடு மட்டுமல்லாமல், காது கேட்கும் தன்மையும் அதிகரிக்கும் தைராய்டு கட்டி, கன்னப்புற்று, அதிக சப்தம் உள்ள இடத்தில் வசிப்பவர்களின் குறையும் காது கேட்கும் தன்மையையும் தூதுவளை சரி செய்யும்.

நீங்காத காதுசீழுக்கு தடை
நீக்கும் தூதுவளையே விடை

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

## கொய்யா இலை!

இதை குறுக அரிந்து, கைப்பிடி அளவு மண் சட்டியில் போட்டு ஒரு மிளகாய் அளவு தட்டிப்போட்டு வதக்கி இரண்டு டம்ளர் தண்ணீர் ஊற்றி, இதை ஒரு டம்ளராக காய்ச்சி, ஒரு மணிக்கு ஒரு தடவை ஒரு அவுன்ஸ் வீதம் குடித்தால் வயிற்றுப்பொருமல், பேதி, காலரா முதலியன குணமாகும்.

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

# புற்றுநோயின் அறிகுறிகளும் தடுக்கும் முறையும்!

இந்த புற்று நோய் என்பது தாவரம், பறவைகள், மனிதர்கள் வரையிலே எல்லோரிடமும் காணலாம்! இது ஒரு பரம்பரை வியாதியும் அதில் தொத்து வியாதியும் கிடையாது. மனிதன் தோன்றிய போதே இந்த நோயும் தோன்றியிருக்கலாம்.

ஆரம்ப கால கட்டத்தில், இதற்கு வலி ஏற்படுவது கிடையாது. பற்கள் தாறுமாருக் வளர்ந்திருநதாலும், பற்களின் கூர்மையான பாகங்களினுலும் ஏற்படும் உறுத்தல், உதடு, நாக்கு, தாவடை போன்ற இடங்களில் புற்று நோய் ஏற்பட வாய்ப்புள்ளது.

சிறுவர்களுக்கு சிறுநீர் வெளியேறும், துவாரத்தில் சதை வளர்ந்து, தடை ஏற்பட்டால், அதன் காரணமாக ஏற்படும் உறுத்தலினுல் புற்று நோய் உண்டாகும்.

கன்னம், உதடு, நாக்கு போன்ற இடங்களில் ஏற்படும் புண்கள், மூன்று வாரத்திற்குள் ஆருமல் நீடித்திருந்தாலும் ஆகாரம், தண்ணீர் சாப்பிடும் போதும் தடை ஏற்பட்டாலும், தொண்டைக்கம்மல் பல நாட்கள் நீடித்திருந்தாலும், உடலில் பல பாகங்களில் வலி இல்லாத கட்டி ஏற்பட்டாலும், உடலில் இருக்கும் மச்சத்தின் நிறம் மாறினுலும், உடலிலுள்ள ஒன்பது துவாரங்களில், அதிக கசிவு ஏற்பட்டாலும், மலத்தை வெளியாக்கும் இடத்தில் ஏதாவது மாறுபாடுகள் காணப்பட்டாலும், உடனே மருத்துவரிடம் பரிசோதனை செய்துகொள்ள வேண்டும்.

புற்று நோயில் வலியுண்டு அதுதான் இந்நோய் முதிர்ச்சி அடைந்து விட்டது என்பதன் அறிகுறியாகும்.

புற்று நோயில் வாய்ப்புற்று, கன்னப்புற்று, மார்புப்புற்று, தொண்டைப்புற்று, வயிற்றுப் புற்று, மர்மஸ்தானத்தில் புற்று என்று பல வகைகள் உள்ளன. எந்த உறுப்புகளிலும் புற்று நோய் ஏற்படலாம்.

பெண்களுக்கு சாதாரணமாக மார்பிலும் பெண்மர்மஸ்தானத்திலும்தான் புற்றுநோய் துவக்கத்தில் சில மாதங்கள் வரை, ஒருவித பிசுபிசுப்புள்ள வெண்மையான சளி போன்ற திரவம் வழியும்! முதலில் மாதவிடாய் நாட்களுக்கிடையில் சிறு இரத்தக்கசிவு ஏற்படும். ஆண் பெண் சேரும் போது, அசாதரணமான இரத்தம் காணுமானல் அது கண்டிப்பாய் புற்றுநோயின் அறிகுறியாகும். ஆகவே ஆரம்பக்காலத்தில் புற்று நோயை குணப்படுத்த அதிக வாய்ப்புண்டு!

---

## காந்தியடிகளின் சிந்தனைகள்!

o குடிப்பது கெட்ட பழக்கம் என்பதை விட, அது ஒரு வியாதியே.

o மன்னிக்கும் தன்மையே வீரனின் பண்பாகும்.

o வலிமை உடல் பலத்தால் அல்ல மன உறுதியிலிருந்தே ஏற்படுகிறது.

o மனித சமுதாயத்தின் நலனுக்காக ஓயாது உழைப்பது தான் உயர்ந்த ஒழுக்கமாகும்.

o தோல்வி எனக்கு சோர்வு தராது. மாறாக அது என்னை ஊக்குவிக்கும்.

o பசித்துப்புசி, உன் உணவுக்காக நீயே உழைக்க வேண்டும்.

o ஒவ்வொரு வீடும் ஒரு பல்கலைக் கழகம். பெற்றோர்கள் அதன் ஆசிரியர்கள்.

o உனக்கு நீயே நீதிபதியாகி இரு உண்மையில் நீ மகிழ்ச்சியாக இருப்பாய்.

---

# சம்பங்கியே! மரச்சம்பங்கியே!

சம்பங்கி—மரச்சம்பங்கி இப்பொழுது நகரங்களில் சாலைகளிலும், வீடுகளிலும் தோட்டங்களிலும் பயிராக்கப்படுகிறது. இம் மரங்கள் ஆந்திர பிரதேசத்தில் அதிகமாகக் காணப்படுகின்றன.

இவைகள் நன்ருகப் பூத்துக் காய்த்துச் செழித்து நிற்பது கண்களுக்கோர் அரிய காட்சி விருந்தாகும்.

சம்பங்கிப் புஷ்பங்கள் பொன்னிறமாக இருப்பதால் தான் வடமொழியில் இம்மலருக்கு "சுவர்ண புஷ்பம்" காஞ்சன மலர் 'கேமகுசுமம்' என்ற பெயர்கள் வழங்கப்பட்டு வருகின்றன.

எல்லாருடைய மனதையும் வயப்படுத்திவிட்ட சம்பங்கி பலவித மருந்துகள் செய்வதற்குப் பயன்படுவதால் வைத்தியர்களும் அதைப் போற்றிப் புகழ்கிருர்கள்.

இம்மலர்களின் உதவியினால் செய்யப்படும் வாசனை திரவியங்களை விற்பனை செய்து வியாபாரிகள் நல்ல இலாபம் அடைகிருர்கள்.

இதன்வேர் பேதி மருந்தாக உபயோகப்படுகிறது. புஷ்பம் தேக ஆரோக்கியத்தையும், பலத்தையும் தருகிறது. பட்டையைப் போட்டுக் கஷாயம் செய்து சாப்பிட சுரம், நீங்குகிறது. இதன் இலைகளுக்கும், துளிர்களுக்கும் கர்ப்பட்டையில் உள்ள எல்லாவிதமான ரோகங்களையும் கண்டிக்கும் சக்தி இருக்கிறது. புண்களுக்கும் இலையை வாட்டி வைத்துக்

கட்டினால் புண்ணிலுள்ள பூச்சிகள் செத்துப்போய் புண் ஆறிவிடும். இதன் விதைக்கும் கிருமிகளை நசிக்கச் செய்யும் குணமிருக்கிறது.

சண்பகப் புஷ்பத்தின் கியாழம் அஜீரணம், மலக்கட்டு, சுரம் முதலிய வியாதிகளைப் போக்கடிக்கும். வேளைக்கு அரை அவுன்சு முதல் இரண்டு அவுன்சுவரை சாப்பிடலாம்.

கண் எரிச்சல், கண் சிவந்திருத்தல், கண்களிலிருந்து தண்ணீர் வடிதல் முதலியவைகட்குக் கண்களைச் சுற்றிப் புஷ்பங்களை அரைத்து பற்றைப் போடவேண்டும்.

வாத சம்பந்தமான நோய்களையும் கண்டித்துச் சுகத்தை தருகிறது.

சம்பங்கியின் வேரையும் நன்ருக உலர்த்திப் பொடி செய்து வைத்துக்கொண்டு பட்டைச் சூரணம் ஒருபங்குவேர் சூரணம் 2 பங்கு கலந்து வெந்நீரில் குழைத்து உடைந்து போன புண்களில் தடவிவந்தால் மிகவும் ஆச்சரியப்படும்படி மூன்றே நாளில் இரணம் ஆறிவிடும்.

சம்பங்கி இலையின் ரசத்தை எடுத்து வடிகட்டி சுத்தமான தேனுடன் கலந்து சாப்பிட்டு வந்தால் எல்லாவிதமான சூதக நோய்களும் கண்டிக்கப்படும். கர்ப்பப்பை சுத்தரிக்கப்படும்.

இதன் கொழுந்தின் சாறைக் கண்களில் பிழிந்தால் கண்கள் குளிர்ச்சியடைந்து பிரகாசமும் அதிகரிக்கும், கண்நோய் தீரும்

இலைகளைப் பசுநெய்யில் வதக்கித்தலையில்கட்ட உடனே சுகமுண்டாகும்.

## பத்திரிகை விற்பனையில் ஒரு சாதனையாளர்

நம்நாட்டை பொறுத்தவரையில பத்திரிக்கை நடத்துவது என்பது ஒரு பெரிய சாதனையாகும். பத்திரிக்கை நடத்துபவர்கள் ஆண்டுவிழா நடத்துவது என்பதும் ஒரு அரிய செயலாகும். அதுவும் குறிப்பாக பத்திரிக்கையின் ஏஜெண்டாக இருபத்தைந்து ஆண்டுகாலம் நடத்தி அதற்கு வெள்ளிவிழா நடத்துவது என்பது இதுவரை பத்திரிக்கை காணுத ஒருநிகழ்ச்சியாகும்.

கடந்த மாதம் அக்டோபர் 2ந்தேதி காந்திபிறந்த நாளன்று தஞ்சை கும்பகோணம், திருச்சி போன்ற ஊர்களுக்கு ஏறத்தாழ ஐம்பது பத்திரிகைகளுக்கு ஏஜெண்டாக உள்ள உயர்திரு S. K. பெருமாள் அவர்கள் வெள்ளிவிழா நடத்தினர். இளைஞர் காங்கிரஸ் தலைவர் G K மூப்பனுர் தலைமையில் பல கட்சியின் தலைவர்களும் பேசிய பிறகு சித்த மருத்துவம் ஆசிரியர் டாக்டர். அம்பிகாபதி அவர்களின் உரைக்குப்பிறகு விழா இனிது முடிந்தது.

தன் குடும்பத்தையே அந்தத் தொழிலில் ஈடுபடுத்தியுள்ள உயர்திரு. S K. பெருமாள் அவர்கள், பல பத்திரிகை ஆசிரியர்கட்கும், தொழிலில் தன்னிடம் பணியாளர்களையும் பராட்டி; சிறப்பு செய்தார் இவரைப் போல, இனி நம் நாட்டில் பல பத்திரிகை ஏஜெண்டுகளும் விழா நடத்தி பத்திரிகை தொழிலை வளர்க்க வேண்டும்.

வாழ்க அவர் தொண்டு!

வளர்க அவர் புகழ்

ஆசிரியர், சித்தமருத்துவம்

# பரம்பரை தத்துவத்தைப் பற்றி!

(டாக்டர்: அன்னிபெசண்ட் அம்மையார்)

இப்பொழுது அதைப் பொறுத்து ஐரோப்பாவில்-நான் உதாரணமாக இங்கிலாத்தை எடுத்துக் கொள்ளுகிறேன். 'பாரம்பரியக் கோட்பாடு எங்கு இருக்கிறது'' என்று நான் கேட்பேனென்று சொன்னேன் தெளிவாக நான்கு வகுப்புகளில் (பாரம்பரியம்) அது உண்டு. மத்திய காலத்தை உற்று கவனித்து, நமது காலம் வரையிலும் அது எப்படி செயல்புட்டு வந்தது என்பதைப் பார்த்தால் நீங்கள் உற்பத்தி செய்யும் வகுப்பார்களானத் தொழிலாளிகள் நிலத்துடன் பிணைக்கப்பட்டு வாழ்ந்தார்கள். என்பதை நீங்கள் காணக்கூடும். தலைமுறை தலைமுறையாக பண்ணையாரின் மகன் பண்ணையாளாகவே இருந்து வந்து இருக்கிறான். ஆகவே அதனுடைய அறிகுறி தற்காலஇங்கிலாந்தில் இன்றும் காணப்படுகின்றது. ஏனென்றால் இங்கிலாந்தில் இப்பொழுது ஒரு நாடோடியோ, ஒரு வேலையற்றவனையோ கண்டால், அவனை என்ன செய்கிறார்கள்? அவர்கள் செய்யும் முதல் வேலை, அவன் எந்த கிருத்துவக் கோவிலின் ஆதிக்கத்துக்குட்டட்ட இடத்தின் எப்பகுதியைச் சார்ந்தவனென்றும் விசாரித்து தெரிந்து கொள்வது தான். பிறகு அவனை அவர்கள் அவன் பிறந்த இடத்துக்கு அனுப்புகிறார்கள். ஏனென்றால் அந்த நிலத்தில் தோன்றிய சிசுவான அவன் எந்த நிலத்தில் தோன்றினானோ அந்த நிலந்தின் பாகத்தில் தான் அவன் பராமரிக்கப்பட்ட வேண்டுமென்பதற்காகத் தான். பிறப்பினால் அவன் எந்த மக்கள் பிரிவைச் சேர்ந்தவனாக இருக்கிறானோ அவர்கள் அவனுடைய செலவை ஏற்க வேண்டும்.

(தொடர்ச்சி 32ம் பக்கம் பார்க்க)

## பிழைக்கு வருந்துகிறோம்

சென்ற மாதம் அக்டோபர் 94ல் எமது "சிற்சபை பார்மசி" மருந்துப் பட்டியலில் ஏற்பட்டிருக்கும் பிழையைத் திருத்தி இம்மாதம் சரியாக வெளியிட்டுள்ளோம். வாசகர்கள் பொருத்திடுக என அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

# சிற்சபை பார்மஸியில் தயாராகும் மருந்துகள் பட்டியல்

152, ரங்கராஜபுரம் ரோடு, கோடம்பாக்கம், சென்னை-24 போன் : 426714

| மருந்தின் பெயர் | உபயோகம் | அளவு அனுபானம் |
|---|---|---|
| 1 சீரணாதி லேகியம் | மலச்சிக்கலை நீக்கி மார்பு நோய், இடுப்பு நோய், முதுகுபிடிப்பு, வயிற்று நோய் குணமாகும். | இரவு மட்டும் $\frac{1}{2}$ தேக்கரண்டி |

| | | |
|---|---|---|
| 2 வெள்ளைப்பூண்டு லேகியம் | புழு உற்பத்தியைத்தடுக்கும். மண் சாம்பல் தின்பன தடுக்கும்.சோகையை போக்கி, பசியை உண்டுபண்ணும். | காலை மாலை $\frac{1}{2}$ தேக்கரண்டி |
| 3 காயலேகியம் | பிரசவத்திற்கு பின் தொடர்ந்து சாப்பிட தாய்ப்பால் பெருகி சீரண கோளாறை நீக்கி மாதவிலக்கின் அழுக்கைபிரித்துவிடும். | காலை மாலை $\frac{1}{2}$ தேக்கரண்டி |
| 4 தாமரைப்பூலேகியம் | இருதய வியாதி நீங்கும். மூளைக்கு பலம் அறிவு விசாலமாகும். மறதி நீங்கும. | காலை மாலை $\frac{1}{2}$ தேக்கரண்டி |
| 5 திப்பிலி லேகியம் | காசம், மந்தாரகாசம், க்ஷயம், இளைப்பு, குழந்தைகள் சளி நீங்க இருமல்குணமாகும். | காலை மாலை $\frac{1}{2}$ தேக்கரண்டி |

கிடைக்குமிடம்: சிற்சபை மருத்துவமனைநெ. 152, ரங்கராஜபுரம்ரோடு, சென்னை-24

என்பதற்காகத் தான். அவனுடையக் கோவிலின் அதிகாரப் பகுதிக்கே பின்னும் அவனை அனுப்புவது என்பது பழைய முறைகளில் பல சின்னங்களில் ஒன்ருக இருக்கிறது நீங்கள் சமுதாயத்தில் மத்திய வகுப்பினரை எடுத்துக் கொள்ளுங்கள் சரித்திரத்தில் மத்திய காலங்கள் பூராவும தொடர்ச்சியாக ஒரு வகுப்பைச் சேர்ந்த மக்களின் தொழிலை நடத்தும் சுதந்திரமானது அவர்கள் வளரும் பொழுது தகப்பனிடமிருந்து மகன் பெற்றுக் கொண்டிருந்த நிலை இருந்தது இப்பொழுது தான் மூன்று பாகம் ஐரிஷ் இன கலப்பு உள்ளவனுய் இருந்தாலும், என்னுடைய தகப்பனுர் மூலம் நான் ஒரு பாகம் இங்கிலிஷ் இனத்தை சேர்ந்தவனாக இருக்கிறேன் என்னுடைய தகப்பனுர் லண்டனிலிருந்து மீன் வியாபாரிகள் சங்கத்தைச் சேர்ந்தவராய் இருந்தார். அவர்கள் இப்போது மீன் வியாபாரிகள் அல்ல. ஏனென்ருல் அந்த சங்கங்கள் பழைய தனி சலுகைகளின் விநோதமான பின்தங்கியப் பிறப்பினால் நான் பெற்ற பிறப்புரிமையைத் தவிர, என்னைப் பொருத்தவரையில்எனக்கும் அந்த சங்கத்திற்கும் எவ்வித தொடர்பும் இல்லா விட்டாலும் கூட பாரம்பரிய கோட்பாட்டினுல் தான் நான் அந்த சங்கத்தில் என்னுடைய உரிமைகளை அடைய முடியும் இன்னும் பின்னும் நீங்கள் அரசனேயும், பிரபுக்களேயும் எடுத்துக் கொண்டீர்களானுல் தெளிவாக அங்கும்உரிமைகள் பாரம்பரியமாக வருவதைக் காணலாம் பிரபுக்களின் சபைக்கு எதிராக போடப்படும் கூச்சலானது அது பாரம்பரிய கோட்பாட்டின் அடிப்படையில் உருவாக்கப்பட்டிருக்கிறது. என்பதால் தான் ஐரோப்பாவில் அந்த அடிப்படையில் தீர்மானிக்கப்படாத ஒரே வகுப்பானது கிருத்துவ மதம் ஒன்று தான். கிருத்துவ மதம் மக்களாட்சி முறையில் அமைக்கப்பட்டு இருந்தது, மக்களை ஏற்றுக் கொள்ளுகிறது. ஏன்? ஏனென்ருல் மத குருமார்கள் திருமணமில்லாதவர்களாய் இருந்தார்கள். திருமணமற்ற தன்மையோடு, திருமண மற்ற பாதிரி மார்களோடு, பாரம்பரியக் கோட்பாடு இயல்பாக இருக்கவே முடியாது. அந்தக் காரணத்தினுல் தான் கிறித்துவ மதத்தில், பாரம்பரியத்துவம் காணப்படவில்லை



பதிவு எண் : 75311/89 U 2 அஞ்சல் பதிவு எண்: TN/KCM-27

"HENNA" என்ற மூலிகையானது மருத்துவத்திற்கும் பெண்களின் அழகு சாதனமாகவும், இன்றைய தினம் இந்தியா, பாகிஸ்தான், எகிப்து போன்ற நாடுகளில் அதிகமாக உபயோகப்படுகிறது. இதை கைக்கும், கால் நகங்களிலும் உபயோகப்படுத்துகின்றனர் இதுதான் நம் நாட்டு மருதாணி ஆகும்.

கண் குருடர்கள் எம். ஏ படிப்பு வரையிலும் படித்து முதன்மையாக தேறுவதைப் பார்க்கின்றோம் இதற்கு முக்கிய காரணம் லூயிஸ் பிரெய்லி என்ற பிரெஞ்சு கண் குருடர் 160 வருடங்கட்கு முன்பு கண்டு பிடித்ததை, எல்லா மொழிகளிலும் வடிவமைத்து கொள்கின்றனர்.

## உலகின் சில மருத்துவ (?)

பிறப்பிலேயே குழந்தைகள் அங்கஹீனமாய்ப்பிறப்பதைத் தடுக்க, 100 மில்லி கிராம் வைட்டமின் 'சி' சத்து உடலுறவிற்கு முன் மூன்று வாரத்திற்கு தினமும் சாப்பிட்டால், தடுக்கலாம் என்று வெளிநாட்டில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.

இப்போது குண்டிக்காயில் ஏற்படும் கற்களை கரைக்க சோனிக் அலை அதிர்வுகள் Sonic Shock Wave மூலம் கரைக்கின்றனர். நம் நாட்டில் சித்த மருத்துவ மீன் தலைக் கல்லில் தயாரிக்கும் மருந்தால் கரைக்கின்றனர்.

முடி வளருவதற்கு, தலையிலுள்ள தோலோடு மற்றவர்கட்கு வைத்து அறுவை செய்து வெற்றி பெற்று வருகின்றனர். இதற்கு Scalp Redvction என்று பெயர் இதனுடைய விளைவுகளை பற்றி பிரிட்டிஷ் விஞ்ஞானிகள் ஆராய்ச்சி செய்கின்றனர்.

பல கோடிக்கணக்கான பணம் எயிட்ஸ் வியாதியை குணப்படுத்த செலவிடப் படுகிறது தற்போது பூண்டில் முப்பது விதமான மருத்துவப் பொருட்கள் உள்ளதாகவும் இது எயிட்ஸ் நோய் குணப்படுத்தும் என்றும் வெளிநாட்டில் கண்டு பிடித்துள்ளனர்'

நிறுவனர்: அமரர் டாக்டர். ப. சிற்சபை, கௌரவ ஆசிரியர் டாக்டர். சி.அம்பிகாபதி, உதவி ஆசிரியர், வெளியிடுபவர்: டாக்டர் சி. தங்கதுரை, 122-C, இராஜ வீதி, காஞ்சிபுரம்-2. (போன்2981 அச்சிடுவோர்: P.T. M. பிரஸ், 73-B, வள்ளல் பச்சையப்பன்தெரு காஞ்சிபுரம்-631501.